# காப்பியக் கதைகள்

இரண்டாம் புத்தகம்

## மணிமேகலை



சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை.

கழக வெளியீடு - ௪௭௩

# காப்பியக் கதைகள்

## (இரண்டாம் புத்தகம்)

# மணிமேகலை






புலவர் "அரசு"
எழுதியது




திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை 1.

# பதிப்புரை

"மணிமே கலையென்னும் மாண்காப் பியநூல்
அணிநந் தமிழ்க்கேன் றறி."

வாழ்க்கைக்கு வேண்டும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால் நெறி நாற்பொருளை, ஓர் உண்மை வரலாற்றில் வைத்துச் செம்மையுற உணர்த்தின், மக்கள் எளிதாகவும் இனிதாகவும் உணர்ந்து மேற்கொண்டு ஒழுகுவர்.

அங்ஙனம் உணர்த்தும் நூலைப் பொருள் தொடர்நிலைச் செய்யுள் என்று வழங்குப. அதன்கண், நாடு, நகர், அரண், அரசியல் தலைவன், தலைவி, வாழ்க்கை, உதவி, வெற்றி முதலிய பலவும் விளக்கப்பெறும்.

அம்முறையில் அமைந்த, செந்தமிழ் நாட்டுச் சீரிய தொடர்நிலைச் செய்யுள்களுள் (காப்பியம்) தலை சிறந்தது, ஆசிரியர் நடுநிலை திறம்பா நல் இசைப் புலவர் சீத்தலைச் சாத்தனரால் செய்யப்பெற்ற, அருள் ஒழுக்கம் நிறைந்த "மணிமேகலை" என்னும் செழுந்தமிழ் நூலாகும்.

காப்பியக் கதைகளைச் செவ்விய முறையில், இனிய எளிய நடையில், தக்க இடத்துச் சிறந்த ஓவியத்துடன் வெளிப்படுத்தும் கருத்துடையோம். அவ் வரிசையில் "காப்பியக் கதைகள்" (முதற் புத்தகம்) என்னும் பெயருடன் சிலப்பதிகாரம் வெளிவந்தது. இரண்டாம் புத்தகமாக இந்நூல் வெளிவருகின்றது. இதன்கண் அருள் நெறி பூண்ட அன்புத் தெய்வமாகிய 'மணிமேகலை'யின் மெய் வரலாறுகள் பல தலைப்புக்களாக அமையப்பெற்றிருக்கின்றன.

இதனை ஆக்கித்தந்த புலவர் திரு. அரசு அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக. மூன்றும் புத்தகம் முதலியவும் விரைவில் வெளிவரும்.

மாணுக்கர்களும் ஆசிரியர்களும் பொதுமக்களும் இதனைக் கற்றும் கற்பித்தும் தமிழுக்கு ஆக்கந்தந்து எங்களை ஊக்குவார்களாக.

திருவள்ளுவர் ஆண்டு, கக௯எக
புரட்டாசி
1—11—'48, சென்னை.

சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகத்தார்

## உள்ளுறை



சுதமதி உதயகுமரனுக்குப் புத்தி சொல்லுகிருள்.

(7-ம் பக்கம்)

# மணிமேகலை

## க. உதயகுமரன்

சோழநாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினத்திலே கரிகாற்சோழனுக்குப் பிறகு மாவண்கிள்ளி யென்றும் நெடுமுடிக்கிள்ளி யென்றும் பெயர்பெற்ற சோழ அரசன் அமர்ந்து சோழநாட்டை ஆண்டான். கோவலன் இறந்து இரண்டு மூன்று ஆண்டுகளே ஆயின. அவனைப்பற்றியும் கண்ணகியைப்பற்றியும் சோழநாட்டிலே சிறு குழந்தைகள் முதல் யாவரும் அறிந்திருந்தார்கள். சோழநாடு மட்டுமன்று; தமிழ்நாடே அறிந்திருந்தது. கண்ணகியைப் பத்தினித் தெய்வம் என்றே பெரியோர்களெல்லோரும் புகழ்ந்தார்கள்.

இந்த நிலையிலே, வழக்கம்போல இந்திரவிழாக் கொண்டாட்டம் தொடங்கியது. திருவிழா என்றால் வாலிபர்களுக்குக் கொண்டாட்டமல்லவா? அரசகுமாரனான உதயகுமரன் வீரமும் அழகும் கல்வியும் நிறைந்தவன். மாவண்கிள்ளிக்குப் பிறகு அவனே அரசனாகத் தக்கவன். அவனைத் தங்கள் கண்ணாகவே குடிகள் கருதினர்; காணும்போதெல்லாம் அவர்கள் உள்ளம் மகிழ்ச்சியால் நிறைந்து நிற்கும். செல்வம் நிறைந்த வணிகர் வீட்டு வாலிபர்களும் வேளாளர் வீட்டு வாலிபர்களும் அவனைச் சூழ்ந்திருப்பார்கள்.

அந்த இந்திரவிழாவிலே அவன் ஒருவனில்லாவிட்டால் உயிரிராது.

வீரர்களின் விளையாட்டுக் கூடங்களிலே அவன் பங்கெடுத்துக்கொள்வான். பங்கெடுத்துக் கொள்வதோடு வாட்போர், மற்போர், விற்போர், சிலம்பம் முதலான வீர விளையாட்டுக்களிலே அவனே வெற்றி பெறுவான். சிறந்த கலைஞர்கள் கூடிய கழகங்களிலே சென்று கலையைப்பற்றிப் பேசுவான். சித்திர மண்டபங்களிலே சிறந்த சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்து பரிசளிப்பான். அவன் இல்லாத அவைகள் இல்லையென்றே கூறலாம்.

அந்த இந்திரவிழாவிலே ஒரு குறைமட்டும் இருந்தது. அங்கங்கே நாட்டியக் கச்சேரிகள் நடைபெற்றன. எனினும், நாட்டியம் சுவையின்றி இருந்தது. பார்க்கின்றவர்கள் சிறிது நேரமும் அங்கே பதிந்து பார்ப்பதில்லை. ஏன் தெரியுமா? மாதவி என்ற நாடகக் கணிகை கோவலன் இறந்த பிறகு இம் மாதிரியான கொண்டாட்டங்களிலே பங்கெடுத்துக்கொள்வதில்லை. அவள் மட்டுமா? அவள் தன் மகள் மணிமேகலையையும் நாட்டியமாட விடவில்லை. மணிமேகலை மாதவியைவிட அழகுடையவள். நல்ல கலைகளைக் கற்றவள். நாட்டியத்திலே சிறந்த பயிற்சி பெற்றிருந்தாள். அவளாலே இந்திரவிழா அழகுபெறும் — கிளர்ச்சியாயிருக்கும் — என்று நினைத்தார்கள் நகரத்திலுள்ளோர். அவள் நடனம் இல்லாமற் போகவே, நடன அரங்குகள் எல்லாம் ஒளியிழந்துபோய்விட்டன.

மாதவியின் அன்னை சித்திராபதி. அவளுக்குத் தன் குலத் தொழிலைவிட மனமில்லை. செல்வாக்கு மிகுந்த

வாலிபர்களை வசப்படுத்திப் பணம் பிடுங்குவதே நாடகக் கணிகையர் தொழில். ஆகவே, அதை விட்டால் வாழ்க்கை நடத்த முடியாதென்று நினைத்தாள். அது மட்டுமா? குலத்தொழிலை விடுவது பாவமென்றும் நினைத்தாள். அவரவர் குலத்தொழிலை விடக்கூடா தென்ற எண்ணங்கொண்டவர்களில் அவளும் ஒருத்தி. பெண்கள் கற்புடையவர்களாக இல்லாமல் தீய ஒழுக் கத்திலே செல்வது பாவ மென்பதை அவள் நினைக்க வில்லை. ஆகவே, வசந்தமாலை என்னும் வேலைக்காரியை மாதவியிடம் அனுப்பினாள். மாதவி அவளிடம் 'மணி மேகலை இனி எப்போதும் கணிகைத் தொழிலைக் கைக்கொள்ளமாட்டாள்' என்று கூறி அனுப்பி விட்டாள்.

உதயகுமரனுக்கு மணிமேகலையை வசப்படுத்த வேண்டுமென்று ஆசையிருந்தது. அவள் நடனத்தைக் காணப் பெருவிருப்பம் இருந்தது. ஆகையால், அவ னும், இந்த இந்திரவிழாவிலே ஊக்கமிழந்து காணப் பட்டான்.

## உ. உதயகுமரன் மணிமேகலையைப் பார்த்தல்.

கோவலனும் கண்ணகியும் இறந்த பிறகு மாதவி துறவியானாள். கோவலனைத் தவிர மற்றவரை நினைக்க வும் மறுத்தாள். கணிகையர் குலத்திற் பிறந்தாலும் அவர்களின் குலத்தொழிலை வெறுத்தாள். தன் மகள் மணிமேகலையைக் கண்ணகியின் மகளாகவே கருதி, எல்லாரிடமும் இன்பமாகக் கூறுவாள்.

இவ்வாறிருக்கும்போது, ஒருநாள் மணிமேகலையும் அவள் தோழியான சுதமதியும் புத்தருடைய திருவடி

களிலே அணிவதற்கு மலர்மாலை தொடுத்துக்கொண் டிருந்தார்கள். அப்போது மணிமேகலைக்குக் கோவலன் கண்ணகி ஆகிய இருவருடைய துன்பமும் தாயுரைப்பக் கேட்டு உள்ளம் கலங்கியது ; கண்களிலிருந்து நீர் ததும் பிப் பூமாலையின் மேலும் விழுந்தது. அதனல் அது புத்தர் பெருமானுக்குத் தகாது என்று மாதவி கூறினுள். எனவே, இவர்களிருவரும் வேறு மலர் பரித்துவர அந் நகரிலுள்ள உவவனம் என்னும் மலர்ப்பொழிலை அடைந் தார்கள்.

அவர்கள் வணிகரின் தெருவழியே செல்லும்போது, எட்டிகுமரன் என்னும் வணிகன் பார்த்துக்கொண் டிருந்தான். அவன் உதயகுமரன் தோழன். எட்டி குமரனுக்கு மணிமேகலையைக் கண்டவுடன் கோவலன் நினைவு வந்தது. அவன் மதுரையிலே வீணே கொலை செய்யப்பட்டதை நினைத்துக் கலங்கினுன். அதனல் அவன் மீட்டும் யாழைக் கவனக் குறைவினுல் பிழை யாக மீட்டினுன். அதே சமயத்தில் அங்கு வந்த உதய குமரன் யாழைப் பிழையாக மீட்டற்குக் காரணம் என்ன என்ருன். அவன் மணிமேகலை அந்த வழியே உவவனம் செல்வதைக் கூறி, யாழைத் தப்பாக மீட்ட நேர்ந்ததையும் விளக்கினுன். மணிமேகலையின்மேல் நாட்டமாக இருந்த உதயகுமரனுக்குத் 'தேடப்போன மருந்து காலிற் கிடைத்ததுபோலாயிற்று. விரைவாக உவவனத்தை அடைந்தான்.

உவவனத்திலே மலர்கொய்துகொண்டிருந்த அந்தப் பெண்களுக்கு உதயகுமரன் வருவது தெரிந்தது. மணி மேகலை விரைவாக அங்கேயிருந்த பளிங்காலான ஓர் அறையிலே புகுந்து மறைந்தாள். உதயகுமரனும்

வந்தான். சுதமதி அவனுக்குப் புத்தி சொல்லி அனுப்பி விட்டாள். எனினும், எப்படியாவது மணிமேகலையை அடைவதாகச் சபதம் கூறிச் சென்றான் அவன். ஆகை யால், அவர்கள் எப்படி வீட்டிற்குச் செல்வதென்று தெரியாமல் விழித்தார்கள்.

இந்நிலையிலே, மணிமேகலை என்னும் ஒரு தெய்வம் மானிடப் பெண்போல உருவங்கொண்டு வந்தது. அவ் வனத்திலே புத்தபாத பீடிகை ஒன்றிருந்தது. புத்த ருடைய திருவடிகளை ஒரு மேடையிலே செய்தமைத்து வழிபடுவார்கள் புத்த சமயத்தவர். இதைப் புத்த பீடிகை யென்று சொல்வர். வந்த தெய்வம் அந்தத் திருவடிகளை வணங்கி வாழ்த்திவிட்டுப் பெண்களிடம் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்தது. அப் பெண் களுக்குப் பேசிக்கொண்டிருக்கும்போதே தூக்கம் வந்து விட்டது.

### ௩. மணிமேகலை மணிபல்லவம் அடைதல்

மணிமேகலையும் சுதமதியும் நன்றாகத் தூங்கும் போது, அந்தத் தெய்வம் மணிமேகலையைத் தன் கைக ளால் தூக்கிக்கொண்டு வானவழியே சென்று மணி பல்லவம் என்னும் தீவில் விட்டுவிட்டது. பிறகு உவ வனத்திற்கு வந்து சுதமதியை எழுப்பிக் கூறியதாவது;-

"நான் மணிமேகலா தெய்வம். மணிமேகலையை நல்வழிப்படுத்தவே நான் மணிபல்லவத்திற்குக் கொண்டுபோய்விட்டேன். நீ அவளை நினைந்து வருந் தாதே. மாதவிக்கும் தேறுதல் கூறு. மணிமேகலை பிறந்தபோது நான் மாதவியின் கனவில் வந்ததையும் உரை. மணிமேகலை அந்தத் தீவிலிருந்து திரும்பும்

போது தன் பழம் பிறப்பையும் அறிந்து வருவாள். அப்போது இந்த நகரிலும் பல அற்புதங்கள் நடைபெறும். மணிமேகலை சிறந்த புத்தமதத் துறவியாவாள்."

இவ்வாறு கூறிய தெய்வம் மறைந்து, உதய குமரன் கனவிலும் சென்று, மணிமேகலையைக் கெடுக்க நினைப்பது தகாது என்று கூறிச்சென்றது. உதயகுமரன் சிறிது கலங்கினும் மறுபடியும் மணிமேகலையின் நினைவினன் ஆனான்.

மணிமேகலா தெய்வத்தால் எழுப்பப்பட்ட சுதமதி அங்கிருந்து சென்று உலக அறவி என்னும் இடத்தை அடைந்தாள். உலக அறவி யென்றால் பொதுச் சத்திரம். அங்கே, ஒரு தூணில் ஒரு பதுமை யிருந்தது. அதற்குக் கந்திற்பாவை என்று பெயர். அந்தப் பதுமையில் ஒரு தெய்வம் இருந்தது. அது சுதமதியைப் பார்த்து, 'நீ முற்பிறப்பில் இரவிவன்மன் என்னும் அரசன் மகள். துச்சயன் என்னும் அரசன் மனைவி. உன் பெயர் வீரை. மாதவி உன் தமக்கையாகிய தாரையாகவும், மணிமேகலை உன் தங்கையாகிய இலக்குமியாகவும் இருந்தார்கள். இன்றைக்கு ஏழாம் நாள் மணிமேகலை வருவாள்' என்றது.

பதுமை பேசியதைக் கேட்டுச் சுதமதி நடுங்கினாள். விடியும் வரையில் அங்கிருந்து, விடிந்தபிறகு மாதவியிடம் சென்று நடந்ததைக் கூறினாள். இருவரும் என்ன நிகழுமோ என்று வருந்தியிருந்தனர்.

### ௪. மணிமேகலை அமுதசுரபியைப் பெறுதல்

மணிமேகலை மணிபல்லவத்திலே விடியற்காலையிலே தூங்கியெழுந்தாள். தான் படுத்த இடம் வேறாகவும்

எழுந்த இடம் வேறாகவும் இருந்ததை அறிந்து கலங்கினாள். சுதமதியைத் தேடினாள். தந்தையை நினைத்து வாய்விட்டுக் கதறி அழுதாள். தன்னை இங்கே தனியே கொண்டுவந்து விட்டவர் யாரோ என்று துன்புற்றாள்.

இவ்வாறு துன்பத்துடன் அங்குமிங்கும் அலையும் போது பழம்பிறப்பை உணர்த்தும் புத்தபாத பீடிகை ஒன்றைக் கண்டாள். கைகுவித்து மூன்றுமுறை வலம் வந்து பணிந்தாள். அப் பீடிகையைக் கண்டவுடன் அவள் பழம் பிறப்பை அறிந்தாள்.

உலக அறவியிலே சுதமதிக்குத் தூணிலிருந்த பதுமை கூறியவாறு இரவிவன்மன் மகள் இலக்குமியாயிருந்ததாகவும், இராகுலன் என்பவனை மணந்ததாகவும், அவன் பாம்பு கடித்து இறந்ததனால் இவளும் உடன்கட்டை ஏறி யிறந்ததாகவும் அறிந்தாள். தன் கணவனான இராகுலன் எங்கே பிறந்தா னென்பதை மட்டும் அறிய முடியவில்லை.

இச்சமயத்தில் மணிமேகலா தெய்வம் வந்தது. அதுவும் புத்த பீடிகையை வணங்கிற்று. மணிமேகலை அத்தெய்வத்தை வணங்கி நின்றாள். அத்தெய்வம் அவளை நோக்கி, "உதயகுமரனாக இராகுலன் பிறந்தான். பழம் பிறப்பின் தொடர்ச்சியாலேதான் உதயகுமரன் உன்னை நாடிவந்தான். உன் மனமும் அவனை நாடுகிற தென்பதை அறிந்து, உன் பிறப்பை உணர்த்தி நல் வழியிற் கொண்டுவரவே, இங்கே கொண்டுவந்து சேர்த்தேன். இனிமேல், நீ எல்லா மதத்தினருடைய கொள்கைகளையும் அறியவேண்டும். புத்த மதத்தைப் பரப்பவேண்டும். ஆகையால், நீ துறவியாகவே இருக்க வேண்டும்,' என்று கூறிற்று. பிறகு வான்வழிச்



குளத்திலிருந்து அமுத சுரபி வெளிவருகின்றது;
மணிமேகலை வியப்புடன் கையேந்தி நிற்கிறாள்.

செல்லவும், மாற்றுருவம் எடுக்கவும், பசியின் துன்ப மின்றி யிருக்கவும் மூன்று மந்திரங்களைக் கூறி மறைந்து விட்டது. மணிமேகலை மகிழ்ச்சியடைந்தாள்.

மணிபல்லவம் மிக அழகிய தீவு. தன் அச்சம் நீங்கியவுடன். மணிமேகலைக்கு அதை விட்டு வர மன மில்லை. மெல்ல உலாவிக்கொண்டிருந்தாள். மற்றொரு தெய்வப்பெண் அங்கே வந்தாள், அப்போது. அவள் பெயர் தீவதிலகை அவள் அந்தப் புத்தபாத பீடிகையைக் காப்பவள் ; அந்தத் தீவைக் காப்பவள் என்றும் சொல்லலாம். அவள் மணிமேகலையைப்பற்றி அறிந்து மகிழ்ந்தாள். அவளை ஒரு குளத்திற்கு அழைத் துச் சென்றாள். அன்று பௌர்ணமி. இவர்கள் அங்கே சென்றவுடன் குளத்திலிருந்து ஒரு பாத்திரம் வெளிவந்து மணிமேகலையின் கையை அடைந்தது. வியப்படைந்த மணிமேகலை அதன் வரலாற்றைக் கூறும் படி கேட்டாள்.

தீவதிலகை, "ஒவ்வோராண்டிலும் வைசாக பூர்ணிமையின்போது இப்பாத்திரம் வெளிவரும். அன்று புத்தர் அவதரித்த நாளாகும். இந்தப் பாத் திரத்திலே உள்ள உணவு சுரந்துகொண்டேயிருக்கும். ஆகையால், அமுதசுரபி என்று பெயர்பெற்றது. நல் லோர் வந்தால் அவர்கள் கையிலே இது சேரும். அறவண அடிகள் இது யாருடையதென்று விளக்க மாகக் கூறுவார்," என்று கூறினாள்.

மணிமேகலை அதன் சிறப்பை உணர்ந்து மகிழ்ந்து புத்தரை வாழ்த்தினாள். அப்போது தீவதிலகை, "மணி மேகலையே! பசியினால் குடிப்பெருமையும், சீரும், சிறப்பும், கல்வியும், நாணமும், அழகும் அழிந்துவிடும்.

மனைவி மக்களோடு செல்வர்களின் வீட்டு வாயிலிலே நிற்கவைக்கும். அந்தக் கொடிய பசியைப் போக்கினால் எவ்வளவு நன்மை யென்று என்னால் கூறமுடியாது. ஆகையால், அப்பணியை நீ மேற்கொள்வாயாக!'' என்று கூறினாள்.

அதைக் கேட்ட மணிமேகலை மகிழ்ச்சியுடன், "அம்மையே! பசியால் வாடுகின்ற குழந்தையின் முகத்தைக் கண்டு தாய் மனமிரங்கிப் பரிவுடன் பால் கொடுக்கிறாள். அதைப்போலவே, பசியால் மெலிந்து மழையிலும் வெயிலிலும் திரிந்து வாடும் ஏழைகளின் முகத்தைக் கண்டு இரங்கி, இப்பாத்திரத்திலிருந்து கிடைக்கும் உணவை யூட்டி, அவர்கள் மகிழ்வுடன் செல்வதைக் காண விரும்புகிறேன்,'' என்று கூறி வணங்கினாள்.

பிறகு, வானவழிச் செல்லும் மந்திரத்தை ஓதி, வான்வழியேவந்து காவிரிப்பூம்பட்டினத்தை அடைந்து, தன் தாயையும் தோழியையும் கண்டு, தான் அடைந்த நிலையை விளக்கிக் கூறினாள். அவர்கள் மூவரும் முற்பிறப்பின் வரலாற்றை அறிந்து மகிழ்ந்தனர். பிறகு மணிமேகலை அறவண அடிகள் எங்கிருக்கிறாரென்று அறிந்து சென்று வணங்கினாள்; தன் வரலாற்றையுங் கூறினாள்.

அறவண அடிகள் மணிமேகலை முதலியவர்களின் முற்பிறப்பை யறிந்து, 'கூத்தாடிகள் வேறு வேறு வடிவம் புனைவதுபோல இருக்கிறது உங்கள் நிலை,' என்று கூறி வியப்படைந்தார். பிறகு, 'இந்த நகரத்திலே உன்னாலே சில நிகழ்ச்சிகள் நிகழும். அதன்பிறகு நான் உனக்குப் புத்த தருமத்தைக் கூறுவேன்,' என்றார் பிறகு, ஆபுத்திரன் கதையைக் கூறத் தொடங்கினார்.

## ரு. ஆபுத்திரன் கதை

வயனங்கோடு என்று ஒரூர் இருந்தது. அவ்வூரிலே பூதி என்னும் அந்தணன் இருந்தான். அவன் ஒரு நாள் ஒரு குழந்தையை ஒரு தோட்டத்திலே கண்டான். அக் குழந்தைக்கு ஒரு பசு பால் கொடுத்துக்கொண்டிருந்தது. அதைக் கண்ட அந்தணன் வியப்படைந்து, 'ஆபுத்திரன்' என்னும் பெயரளித்து எடுத்துச்சென்று வளர்த்தான். அச்சிறுவன் வயது வந்தபோது ஒருநாள் யாகத்திற்காகக் கட்டி வைத்திருந்த பசுவை அவிழ்த்து விட்டுவிட்டான். பசுவைக் கொன்று யாகம் புரிவது பாவமன்றோ? மேலும், அவனை ஆதரித்தது பசு. ஆகையால் அதன் உயிரைக் காப்பாற்ற அவ்வாறு செய்தான்.

அந்த ஊரிலிருந்த அந்தணர்களும், அவனை வளர்த்த தந்தையும் குலத்துரோகி யென்று வைது, வெளியே போகும்படி விலக்கிவிட்டார்கள். என்ன கொடுமை!

தானே முளைத்த புல்லை மேய்ந்து, நமக்குப் பிறந்தது முதல் இறக்கும் வரையிலே பால் தரும் பசுவை, அறுத்து வேள்வி செய்வது புண்ணியமென்று நினைக்கிறவர்களை விடக் கொடியவர் யார்? அந்தணர்களென்றால் அருளுடையோர் என்று பொருள். அருளுடையோர் என்றால் தம் உயிரைப்போலவே எல்லா வுயிர்களையும் நினைப்பவர் என்று பொருள். அவர்கள் மற்ற உயிர்களுக்குத் துன்பம் வந்தால், உடனே விரைவாகச் சென்று நீக்குவார்கள். அதற்கு மாறாகப் பசுவைக் கொல்வோரா? அதற்கு உதவி செய்தவனை ஓட்டிவிடலாமா?

ஆபுத்திரன் மதுரைக்குச் சென்று வீடுவீடாகப் பிச்சையெடுத்துக் கிடைத்த உணவைத் தன் போன்ற

ஏழை யெளியவர்க்குக் கொடுத்துத் தானும் உண்பான். ஒருநாள் நடு இரவிலே வழிப்போக்கர்கள் பசியால் வருந்தினர்கள். அவர்களின் பசியைப் போக்கச் சிறிதும் உணவில்லாமையால் அவன் இருந்த சத்திரத்திலே உள்ள கலைமகள் கோயிலை அடைந்து, அதைக் கூறி வணங்கினன். அப்போது கலைமகள் அமுதசுரபியைக் கொடுத்து, 'நாடு வறுமையடைந்தாலும் இந்த ஓடு வறுமை அடையாது. எப்போதும் உணவிருக்கும்,' என்று கூறினள். அன்று முதல் அதன் உதவியாலே கூன், குருடு, செவிடு, முடம் முதலானவர்களுக்கு வேண்டிய உணவை அளித்துக் காப்பாற்றினன்.

இதை அறிந்த இந்திரன் ஆபுத்திரனிடம் வந்து, 'உன் புண்ணியச் செயலுக்கு மகிழ்ந்தேன். உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்,' என்றான். ஆபுத்திரன் அவனைப் பார்த்து நகைத்து, உன் நாட்டிலே 'கொடுக்கின்றவர்களும் வாங்குகின்றவர்களும் இல்லை. ஆகையால், இரக்க மென்பதையே அறியமாட்டார்கள். ஆனல், இந்தப் பாத்திரம் வருந்தி வந்தவர்களின் கொடும்பசியைப் போக்கி, அவர்களுடைய மகிழ்ந்த முகத்தைக் காட்டும். இப்புண்ணியம் ஒன்றே போதும். நீ எனக்கு எவ்வரமும் அளிக்க வேண்டியதில்லை,' என்று கூறி இகழ்ந்தான்.

இதைக் கேட்ட இந்திரனுக்குக் கோபம் வந்தது. இந்திரன் மழைக்குத் தலைவன். ஆகவே, அவன் பசியால் வருந்துவோ ரில்லாதபடி மழைபெய்யச் செய்தான். அதனல், இவனிடம் பசியென்று வருவோரில்லாமற் போயினர். ஆபுத்திரன் என்ன செய்வதென் றறியாமல் ஊரூராகச்சென்று பசியால் வருந்துவோர் இருக்கிறார்

களா என்று தேடிப்பார்த்தான். ஒருவரும் கிடைக்க வில்லை.

அப்போது, சில வியாபாரிகள், 'சாவக நாடு மழை யில்லாமல் வருந்திக் கிடக்கிறது ; அங்கே சென்றால் நல்லது. எங்களோடு வந்தால் கப்பல் மூலம் அங்கே அழைத்துச் செல்கிறோம்,' என்றார்கள். அவர்களோடு சென்றான். கப்பல் சென்றுகொண்டிருக்கும்போது ஒரு நாள் மணிபல்லவத்தின் அருகே தங்கியது. ஆபுத்திரன் அத்தீவின் அழகைக் காணச் சென்றான். கப்பலோட்டி கள் அவன் வருவதற்குள் வந்துவிட்டா னென்ற நினை வோடு கப்பலை ஓட்டிச் சென்றனர்.

தனியே விடப்பட்ட ஆபுத்திரன் பலநாள் வரை யிலே அப் பாத்திரத்தை வைத்துக்கொண்டு அலைந் தான். ஒருவரும் கிடைக்கவில்லை. 'பலருக்கும் உண வளிக்கும் இப்பாத்திரத்தைச் சுமந்துகொண்டு வீணே யிருக்கமாட்டேன். யாராவது இரக்கமுள்ளவர் கையில் இது கிடைக்கவேண்டும்,' என்று கூறிப் பாத்திரத்தைக் கோமுகி என்னும் பொய்கையிலே விட்டுவிட்டுப் பட் டினியாக இருந்து உயிர்விட்டான். சாவும்போது சாவக நாட்டு நினைவாகவே இருந்தான். ஆகையால், சாவக நாட்டரசன் பசுவின் வயிற்றிலே மகனாகப் பிறந்து, இப் போது நாட்டை ஆளுகிறான்.

இவ்வாறு வரலாற்றைக் கூறிய அறவணவடிகள், காவிரிப்பூம்பட்டினம் யாது காரணத்தாலோ இப்போது மழையில்லாமல் விளைவு குன்றி வறுமை யடைந்தது. புத்தர் திருவருளால் இப் பாத்திரம் உன் கையிற் கிடைத்தது. சென்று பசிப்பிணியைப் போக்குக,' என்றார். மணிமேகலையும் அவரை வணங்கித் துறவி

வேடத்துடன் காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு தெருவை அடைந்தாள்.

சூ. காயசண்டிகை

அவள் மாதவியின் மகளென்பதையும் உதயகுமரன் அவளை விரும்பி யிருக்கிருனென்பதையும் பலரும் அறிவார்கள். ஆகையால், அவளைக் கண்டவர்களெல்லாரும், 'இவள் பிச்சைக்காரியாகக் கையில் ஓடெடுத்துக் கொண்டது வெகு வியப்பு,' என்று கூறி வருந்தினர். அப்போது காயசண்டிகை யென்னும் கந்தருவப் பெண் ஒருத்தி அங்கே வந்தாள். அவளை மணிமேகலை அறிவாள். அவள் கூறியபடியே ஆதிரை யென்னும் ஒரு கற்புடைய மங்கையின் வீட்டிலே சென்று அமுதசுரபியிலே ஐயம் ஏற்ருள். உணவில்லாதிருந்த அப் பாத்திரத்திலே ஒரு கற்புடைய பெண்ணுல் உணவு பெற வேண்டுமென்று பெரியோர்கள் கூறினர்.

ஆதிரை யிட்ட உணவைப் பெற்றுக்கொண்டு பசி யென்று வந்தவர்களுக்குக் கொடுக்கத் தொடங்கினுள். கொடுக்கக் கொடுக்க உணவு நிறைந்து வந்தது. அதைக் கண்டு எல்லோரும் வியந்தனர். காயசண்டிகையும் அவ் வுணவிலே கொஞ்சம் ஏற்று உண்டாள். உடனே அவளுடைய தீராப்பசியுந் தீர்ந்தது. காயசண்டிகை அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. மணிமேகலையை வாழ்த்தினுள். தன் வரலாற்றையுங் கூறினுள்.

காயசண்டிகை வரலாறு

வித்தியாதர உலகிலே காஞ்சனம் என்று ஒரு நகரம் இருக்கிறது. அந் நகரத்திலே யிருந்து காயசண்டிகையும் அவள் கணவனுகிய காஞ்சனனும் பொதியமலையைக் காண வந்தார்கள். வழியிலே ஒரு காட்டாற்றின்

கரையிலே தங்கினுர்கள். விருச்சிகன் என்னும் முனிவன் ஒருவன் அருமையான ஒரு நாவற்கனியை ஒரு தேக்கிலேயிலே வைத்துவிட்டு நீராடப்போனுன். அதன் பெருமையை அறியாத அவள், காலால் மிதித்து நசுக்கிக் கெடுத்துவிட்டாள். அம் முனிவன் வந்து பார்த்துச் சினந்து, 'நான் என் பசியைத் தணிக்க வைத்திருந்த பழத்தை அழித்துவிட்டாய். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையே இப்பழம் கிடைக்கும். என் உணவைக் கெடுத்த நீ பன்னிரண்டு ஆண்டுகள் வரையிலே ஆனைத்தீ என்னும் நோயாலே பெரும்பசி கொண்டு ஆறுதலின்றி அலேவாய். வானத்தில் செல்லும் மந்திரத்தையும் அதுவரையிலே மறந்துவிடுவாய்,' என்று சபித்துவிட்டுப் போய்விட்டான்.

உடனே அவளுக்குப் பெரும்பசி யுண்டாயிற்று. கணவனுகிய காஞ்சனன் அவளுக்காக வருத்தமடைந்தான். காவிரிப்பூம்பட்டினத்திற் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போனுன். ஓராண்டுக் கொருமுறை இந்திர விழாவின்போது வந்து பார்த்துவிட்டுச் செல்வான். பன்னிரண்டாண்டுகளுக்குப் பின் மணிமேகலை கையால் உணவு பெற்றுண்டபோது பசிப்பிணி (ஆனைத்தீ) நீங்கியது.

ஆகையால், மணிமேகலையை வணங்கி வாழ்த்திச் சென்ருள். மணிமேகலை அங்கிருந்து நீங்கிப் பலரும் தங்கியிருக்கும் உலக அறவியை அடைந்தாள். உலக அறவி ஒரு சத்திரமென்று முன்பே அறிவீர்கள். அந்த உலக அறவியிலே சம்பாபதி யென்னும் ஒரு தெய்வத்தின் கோயிலும் உள்ளது. அந்தத் தெய்வத்தையும் தூணிலிருந்த கந்திற்பாவையையும் வணங்கிப் பசியுடன் வருவோர்க்குப்பசி தணிய உணவளித்து வந்தாள்.

## எ. உதயகுமரன் வீழ்ச்சி

மணிமேகலை பிச்சைக்காரி வடிவுடன் உலக அறவிக்குச் சென்றதைக் கேட்ட சித்திராபதி மனம் புழுங்கினுள்; பெருமூச்சுவிட்டாள்; நாடகக் கணிகையரோடு கூடிப் பேசினுள். "மாதவி முனிவர்களிருக்கும் தவப்பள்ளிக்குச் சென்றதே நமக்கெல்லாம் இழிவு. நல்ல அழகுடைய மணிமேகலை இவ்வாறு பிச்சைக்காரியாகப் புறப்பட்டது—கையில் ஓடேந்தியது—நம் குலத்திற்குப் பெருங் கெடுதி. எப்படியாவது அவள் பிச்சைக் கோலத்தை மாற்றுவேன்; கையிலிருக்கும் ஓட்டைப் பிடுங்கி யாராவது பிச்சைக்காரர்களிடம் கொடுப்பேன். இல்லாவிட்டால் நாடகக் கணிகையர் வீட்டிற்குச் செல்லமாட்டேன்,'' என்று சபதம் செய்தாள். சில நாடகக் கணிகையரோடு உதயகுமரன் அரண்மனையை அடைந்தாள்.

மணிமேகலை துறவுக் கோலத்துடன் வந்து உலக அறவியிலே உணவளிப்பது உதயகுமரனுக்கும் தெரியும். அறிவுடையவனுதலால், மணிமேகலையை மிகவும் மதிப்பாகவே நினைத்தான். அவள் ஒழுக்கத்திற்குத் தலை வணங்கினுன். மேலும், மணிமேகலா தெய்வம் வந்து கனவிலே கூறியது அச்சத்தை உண்டாக்கியது. இவ்வளவு இருந்தும் மணிமேகலையின் மேலுள்ள ஆசையை மட்டும் விடமுடியவில்லை. அவளைப்பற்றி மாறிமாறி உண்டாகும் நினைவாலே குழம்பிக் கிடந்தான்.

சித்திராபதி அவனைக் கண்டு வணங்கிக் குலத் தொழிலை விட்ட மணிமேகலையைத் திருப்பிக்கொண்டு வருவது அரசகுமாரனுகிய அவன் கடமையென்று கூறி, அவன் உள்ளத்தைத் திருப்பினுள். அவள் அழகை



உதயகுமரன் உலக அறவியில் மணிமேகலையைக் காணல்

எடுத்துக் கூறி இச்சை யுண்டாக்கினுள். மாயத்திலே தேர்ந்த சித்திராபதியின் தூண்டுதலால் உதயகுமரன் எப்படியும் மணிமேகலையை அடையத் துணிந்தான் : தேரேறி உலக அறவியை அடைந்தான்.

மணிமேகலையைக் கண்டு அருகிற் சென்ருன். உதய குமரனே முற்பிறப்பில் தன் கணவனென அறிந்தவ ளாகையால் அவனே வணங்கினுள். அவன் அவளே நோக்கி, 'ஏன் தவக்கோலம் பூண்டாய்?'' என்று கேட் டான். அதற்கு அவள், 'இவ் வுலகவாழ்க்கை நிலே யற்றது என்றும், இவ்வுடம்பு துன்பத்திற்கு இருப் பிடம் என்றும் அறிந்து துறவியானேன்,' என்ருள்.

பிறகு இங்கிருப்பது கெடுதி என்று நினைத்துச் சம்பாபதியின் கோயிலுக்குட் போய் மந்திரத்தாலே காயசண்டிகையின் உருவங்கொண்டு வெளிவந்தாள். உதயகுமரன் கோயிலுட் புகுந்த மணிமேகலே வெளிவா வில்லே யென்று நினைத்துத் தானும் கோயிலே அடைந் தான். அங்கே மணிமேகலையைக் காணுமையால், 'அவ ளேப் பாராமல் நான் வெளியே போகமாட்டேன்,' என்று சம்பாபதியை வேண்டிக்கொண்டு நின்ருன். அப் போது, தூணிலிருக்கும் பதுமை, 'அவள் இங்கேயில்லே. எம்பெருமாட்டியிடம் இவ்வாறு வேண்டுவது தப்பு,' என்றது.

அதைக்கேட்ட உதயகுமரன் மனங்கலங்கி, 'முன் ஒரு தெய்வம் கனவிலே வந்து கூறியதும் வியப்பு! மணிமேகலே ஏந்திய பாத்திரமும் வியப்பு! இந்தப் பதுமை கூறுவதும் வியப்பு! இவ்வியப்பை யெல்லாம் மணிமேகலையை அடைந்தபின் பார்ப்போம்,' என்று நினைத்து மறுபடியும் வர முடிவு செய்து, அரண் மனையை அடைந்தான்.

உதயகுமரனுக்கு அஞ்சிய மணிமேகலை காயசண்டிகையின் உருவத்தோடே உணவளித்து வந்தாள் ஒரு நாள் குற்றவாளிகள் இருக்கும் சிறைச்சாலைக்குப்போய் அங்குள்ளவர்களுக்கு உணவளித்ததோடு அறநெறியையும் கூறினுள். அவள் கையிலேந்திய பாத்திரத்திலே உணவு சுரந்துவரும் வியப்பைக் கண்ட காவலர்கள் அரசனிடம் உரைத்தனர். அரசன் மணிமேகலையை வரவழைத்து, 'நீ யார்?' என்ருன்.

காயசண்டிகையின் வரலாற்றை இவள் அறிந்திருந்தபடியால், தன்னைக் காயசண்டிகையாகவே நம்பும்படி கூறித் தன் கையிலுள்ள பாத்திரமும் உலக அறவியிலுள்ள ஒரு தெய்வம் கொடுத்தது எனக் கூறினுள். பிறகு, சிறைச்சாலையை அறச்சாலையாக மாற்றும்படி அரசனிடம் வேண்டிக்கொண்டு உலக அறவியை அடைந்தாள். அரசனும் அவ்வாறே செய்தான்.

உதயகுமரன் இவற்றைக் கேட்டான். காயசண்டிகையே மணிமேகலையாக இருக்கவேண்டுமென்று துணிந்தான். மறுபடியும் உலக அறவியை அடைந்தான். அப்போது காயசண்டிகையின் கணவனுன காஞ்சனன் என்பவன் தன் மனைவியைக் காணக் காவிரிப்பூம்பட்டினம் வந்தவன், உலகஅறவியிலே உள்ள மணிமேகலையைக் காயசண்டிகை யென்று நினைத்து அவள் அருகிற்சென்ருன். அவள் கையிலுள்ள பாத்திரத்தைக் கண்டு வியப்படைந்து, 'நீ கையில் வைத்திருக்கும் பாத்திரம் ஏது? உணவு குறையாமல் இருக்கிறதே! தேவர்கள் கொடுத்தார்களா? உன் பசி நோய் நீங்கியதா? பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்தபடியால், நீ வராதிருந்தது

பெரிய கவலையாயிருந்தது எனக்கு,'' என்று பலவாறு பேசி வினவினுன். அவன் காயசண்டிகையின் கணவனென அறியாளாகையால், அவனுக்கு ஒன்றும் மறுமொழி கூருமல் உணவளிப்பதிலேயே கருத்தாயிருந்தாள்.

வந்த உதயகுமரன், 'இவளை நாடியும் ஒருவன் திரிகின்ருன். துறவுக்கோலம் பொய்யோ!' என்று நினைத்துத் தானும் அருகிற் சென்ருன். உதயகுமரன் தன்னை அறிந்துகொண்டான் எனத் தெரிந்துகொண்ட மணிமேகலை அவனுடைய எண்ணம் பிழைபட்டதென்று பலவகையாலும் தெளிவித்துக்கொண்டிருந்தாள். இதைக் கண்ட காஞ்சனன் உள்ளம் கொதித்தது. காயசண்டிகை கெட்ட வழியில் செல்கிருளென்றும், தன்னை மதிக்கவில்லையென்றும் நினைத்துக்கொண்டான். ஆகவே, உண்மையை அறியவேண்டுமென்று சுற்றிக்கொண்டிருந்தான். உதயகுமரனும் மணிமேகலையைப்பற்றித் தவருக நினைத்துக்கொண்டு இரவு வந்தால், இவள் தீய ஒழுக்கத்தைக் கண்டுபிடிக்கலாமென அரண்மனைக்குப் போய்விட்டான்.

இரவு வந்தது. மணிமேகலை காயசண்டிகை வடிவத்துடன் சம்பாபதி கோயிலில் இருந்தாள். உதயகுமரன் அங்கே வந்து, அக் கோயிலுக்குள் நுழையும் போது, பதுங்கியிருந்த காஞ்சனன் உதயகுமரனை வாளால் வெட்டினுன். உதயகுமரன் பிணமானுன். காஞ்சனன் அவளைப் பற்ற ஓடிவந்தான். அப்போது தூணிலிருந்த பதுமை, 'காஞ்சன! அவளைத் தொடாதே. அவள் மணிமேகலை' என்றது. காஞ்சனன் திடுக்கிட்டு நின்ருன்.

மறுபடியும் பதுமை, 'உன் மனைவி யானைத்தீத் தணிந்து, வானவழியே செல்லும்போது துர்க்கையிருக்கும் விந்தமலைக்கு மேலே சென்றாள். அது தவறு. ஆகவே, விந்தமலையைக் காக்கும் விந்தாகடிகை யென்பவள் நிழலினாலே பற்றி யிழுத்துக் கொன்றுவிட்டாள்,' என்றது. அவன் மனக்கலக்கத்துடன் ஓடிவிட்டான்.

மணிமேகலை பிணமான உதயகுமரனைக் கண்டு நடுங்கிப் பழம்பிறப்பின் தொடர்பால் அவன்மேல் வீழ்ந்தழ நெருங்கினாள். அப்பாவையே மணிமேகலையையுந் தடுத்து, 'இவனைத் தொடாதே! பிறப்புத் துன்பத்தை ஒழிக்கும் துறவு நெறியிலே செல்லும் நீ, இவ்வாறு ஆசை வழியே செல்லலாகாது,' என்றது. மணிமேகலை பேசாமல் நின்றுவிட்டாள். இரவு நீங்கிச் சூரியன் உதித்தான்.

உலக அறவியிலே சில முனிவர்கள் இருந்தனர். அவர்கள் வினாவுக்கு விடையாக மணிமேகலை அம் முனிவர்களிடம் நிகழ்ந்ததைக் கூறினாள். அவர்கள் அரசனிடம் சென்று பக்குவமாகக் கூறினர். அரசன், "உதயகுமரன் கூடாத ஒழுக்கம் பூண்டு மணிமேகலையைத் தொடர்ந்தான். அவனை நானே வாளால் வெட்டி வீழ்த்தவேண்டும். அரசன் காவலன்றோ பெண்களுக்குத் துணை? மனுச்சோழன் மரபிலே தோன்றிய அவன் செய்த பிழைக்குக் காஞ்சனன் அளித்த தண்டனை சரியே. எனினும், மணிமேகலையைச் சிறைப்படுத்துக," என்று தன் படைத்தலைவனுக்குக் கட்டளையிட்டான். அவனும் சிறைப்படுத்தினன்.

அ. மணிமேகலையும் இராசமாதேவியும்

உதயகுமரன் அன்னையாகிய இராசமாதேவி இதைக் கேட்டு வெயிலில் அகப்பட்ட புழுவைப்போலத் துடித்

தாள் ; அழுதாள் ; அலறினுள். 'ஒரு கணிகையாலே என் மகன் இறந்தானே,' என்று ஏங்கினுள். அவளுள்ளத்திலே பழிவாங்கவேண்டுமென்ற எண்ணம் பிறந்தது. அதை வெளியிடாமல் அரசனிடம் சென்று 'மணிமேகலையின் நிலையறிந்தும் அவளைக் கெடுக்க நினைத்த நம் மகன் இறந்தது தக்கதே. இளமையிலேயே துறவு பூண்ட அவளைச் சிறைப்படுத்துவது தகாது,' என்று கூறி அவளை விடுவிக்கச் செய்தாள். அழைத்துக் கொண்டு அந்தப்புரத்திற்குச் சென்ருள்.

அங்கே மணிமேகலைக்கு உணவிலே மயக்கும் மருந்தைக் கலந்து கொடுத்தாள். அதை உண்டவர்க்குப் பைத்தியம் பிடித்துவிடும். எனினும், மறுபிறப்பை உணர்ந்தவளாதலால், மணிமேகலையை அம் மருந்து ஒன்றுஞ் செய்யவில்லை. இராசமாதேவி வியப்படைந்து அந்தப்புரத்திலே ஓரறையிலே தனியே இருக்கச்செய்து, தீய ஒழுக்கப் பட்டங் கட்டவேண்டுமென்று கெட்ட இளைஞன் ஒருவனை அனுப்பினுள். மணிமேகலை இதை உணர்ந்து மந்திரத்தினுல் ஆண் வடிவங்கொண்டாள். அந்த இளைஞன் அஞ்சி ஓடிவிட்டான். அந்தப்புரத்திலே வேருேர் ஆடவன் இருப்பது அந்தப்புரத்திற்கே இழிவன்ருே? இந்த இரண்டு கெடுதிகளோடும் விடாமல் வேருேரிடையூறும் அரசி செய்தாள். "இவளுக்கு ஏதோ நோய் ; ஆகையால், உணவு செல்லவில்லை,' என்று பொய்க் காரணங் காட்டிப் புழுங்கும் அறையொன்றிலே இரண்டு மூன்று நாள்வரையிலே அடைத்துவைத்தாள். பசிப்பிணி போக்கும் மந்திரம் அறிந்தவளாகையால், மணிமேகலை எக் கெடுதியுமின்றியிருந்தாள்.

இராசமாதேவிக்கு இப்போதுதான் அறிவுவந்தது.

இவள் தெய்வத்தன்மை யுடையவளென்று அச்சமுங் கொண்டாள். மணிமேகலையை நோக்கி, 'என் மகன் இறந்த துக்கத்தால், அதற்குக் காரணம் நீயேயென்று நினைத்து இந்தத் தீங்குகளைச் செய்தேன். அறிவிற் சிறந்த நீ இவற்றைப் பொறுக்கவேண்டும்,' என்று வேண்டிக்கொண்டாள்.

அரசுக்குரிய செல்வத் திருமகனை—இளவரசனை— இழந்த அன்னையின் கொடுந்துயரம் நீங்குதற்கரிய தென்பதை அறிந்த மணிமேகலை, அவள் தனக்குச் செய்த தீமைகளை யெல்லாம் பொறுத்துக்கொண்ட தோடு, அவளுக்கு ஆறுதலும் கூறத் தொடங்கினாள். மணிமேகலையின் உயர்ந்த குணத்தைப் பார்த்தீர்களா? தீமை செய்தவர்களுக்கும் நன்மையே செய்வதுதான் பகுத்தறிவுடைய மக்களுக்கு நல்லது.

மணிமேகலை அன்புடன் கூறுகிறாள் ;—

"நீ 'என் மகனுக்காக வருந்தினேன்' என்றாய். உன் மகனுடைய உடம்புக்கழுதாயோ? உயிருக்கழு தாயோ? உடம்புக்கழுதா யென்றால், அவ்வுடம்பைச் சுடுவதற்குக் கொடுத்தவள் நீயே. ஆகையால், அவ் வுடம்புக்கழுவது தவறு. உயிருக்கழுதா யென்றால், உன் மகன் உயிர் வேறோருடம்பை எடுப்பது உறுதி. அவ் வுடம்பெடுத்த உன் மகன் எது என்று நீ அறிய மாட்டாய். ஆகையால், அவ் வுயிருக்கு நன்மை செய்ய வேண்டுமானால், எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்ய வேண்டும்."

இவ்வாறு கூறிய மணிமேகலையின் பொன்மொழி களாலே தெளிந்த இராசமாதேவி, தான் செய்த தீமை களிலிருந்து தப்பிய வகையையுங் கூறும்படி வேண்டி

ளுள். மணிமேகலையும் தப்பிய வகையைச் சொன்னுள். மேலும், 'முற்பிறப்பிலே உதயகுமரன் இராகுலன் என்னும் அரசனாக இருந்தான். நான் அவன் மனைவியாய் இலக்குமி என்னும் பெயரோடு வாழ்ந்தேன். தன் சமையற்காரன் சமையற் பாத்திரத்தைத் தவறிப் போட்டு உடைத்துவிட்டதற்காக அவனை இராகுலன் வாளால் வெட்டிக் கொன்றான். ஆகையால், இப் பிறப்பிலே காஞ்சனன் வாளாலே வெட்டப்பட்டு உயிரிழந்தான். தீவினை விடாது,' என்றாள்.

அச்சமுற்ற இராசமாதேவி, 'உன் பழம் பிறப்பை எப்படி யுணர்ந்தாய்?' என்று வினவினாள். அவளும் புத்த பாத பீடிகையா லுணர்ந்ததை விளக்கிக் கூறினாள்.

இராசமாதேவி திகைப்புற்றுத் தனக்கு அறிவு விளக்கமூட்டிய அவளைக் குருவாக நினைந்து வணங்கினாள். மணிமேகலை அவளைத் தடுத்து அரசியாதலாலும், தன் கணவனுக்கு அன்னையாதலாலும் தானும் வணங்கினாள். இவ்வாறு இவர்களிருவரும் நட்புப் பூண்டனர்.

உதயகுமரன் இறந்ததை யறிந்து சித்திராபதி சித்தங் கலங்கினாள். அவள் தானே மணிமேகலையிடம் செல்லும்படி உதயகுமரனைத் தூண்டியவள் ஆகையால், இராசமாதேவியைக் கண்டு தன்மேல் ஐயமுண்டாகாத படி பேசிவர விரும்பினாள். அதனுடன் கடைசி முறையாக மணிமேகலையைத் தன் தீய தொழிலுக்கு வசப் படுத்த முயற்சி செய்யவும் நினைத்தாள்.

சித்திராபதி அரண்மனையை அடைந்து இராசமாதேவியை வணங்கினாள். "அரசியே! கோவலன் இறந்ததால், மாதவி தன் குலத்தொழிலை விட்டுத் தவச்சாலையை

அடைந்ததும், அரங்கி லாடவேண்டிய நடனப்பெண் ஓடெடுத்துக்கொண்டு வீடுதோறுஞ் சென்று பிச்சை யெடுப்பதும் எல்லோரும் நகைப்பதற்குத்தான் இட மாயின. இந்தத் தகாச் செயல்களாலே உதயகுமாரும் இறந்தார். இது மட்டுமோ? இந் நகரத்திற்கே வேறு துன்பமொன்றும் விளையப்போகிறது என்று பெரியோர் கள் கூறுகிறார்கள்!' என்று வருத்தப்படுபவள்போலக் கூறினாள்.

இராசமாதேவி அஃது என்ன என்று வினவ, தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு சித்திராபதி செப்புகிறாள்:

நம் அரசர்பெருமான் முன்னொரு நாள் இந்நகரக் கடற்கரையைச் சார்ந்த ஒரு புன்னைமரப் பொழிலிலே உலாவச் சென்றார். அங்கே அழகிய மங்கை யொருத்தி யைக் கண்டு மயங்கி, அவளோடு ஒரு திங்கள் வரையி லும் அங்கேயே வசித்து வந்தார். இப்படியிருக்கும் போது திடீரென்று அவள் காணமற் போய்விட்டாள். அரசர் கலக்கமுற்றுப் பலவிடங்களிலுந் தேடிக்கொண் டிருந்தார். வேறு சிந்தனையில்லாமலும், அரசியலையுங் குறியாமலும் அலைவதைக் கண்டு குடிகளெல்லோரும் வருந்தினார்கள்.

அப்போது, சமணச் சாரணர் ஒருவர் வந்தார். அவர் அரசரைப் பார்த்து இரக்கங்கொண்டு, "அவள் நாகநாட்டரசனாகிய வளைவணனுக்கும் வாசமயிலைக்கும் பிறந்தவள். பீலிவளை யென்பது அவள் பெயர். அவள் சாதகத்திலே சூரியவமிசத் தரசனை மணப்பாள் என்று குறிப்பிடப்பட்டிருந்தபடி உன்னோடு ஒரு திங்கள் இருந்தாள். இனி அவள் வரமாட்டாள்.

அவள் வயிற்றிலே பிறக்கும் மகனே வருவான். இந்தக் கவலையை இனி விடுவாயாக. இந்திர விழாவைச் செய்யாவிட்டால் இந்நகரைக் கடல் கொள்ளும் என்று மணிமேகலா தெய்வம் எச்சரிக்கை செய்திருப்பதை அறிவாய். அதற்குச் சாதகமாக இந்திர சாபமும் உள்ள தன்றோ? ஆகவே, இந்நகரைக் காப்பாற்றுவதிலே உன் கருத்தைச் செலுத்துக,' என்று நல்லறிவு புகட்டிச் சென்றார். அன்று முதல் நகரத்துக் குடிகள் நடுங்கிக் கொண்டிருக்கின்றனர்.

இராசமாதேவி இக்கதையைக் கேட்டு நகைத்து, 'இதைத்தான் எல்லோரும் அறிவார்களே! அதற்கும் இதற்கும் என்ன தொடர்பு?' என்று வினவினாள்.

சித்திராபதி சிந்தனையுடன் சொல்வாளானாள். "மணிமேகலா தெய்வம் இந்த மணிமேகலையினிடத்திலே காட்டிவரும் அன்பை அறிவோம். இப்போது இவளைச் சிறைப்படுத்தியிருப்பதால் என்ன இடையூறு செய்யுமோ? வீணே அந்தத் தெய்வத்தின் சினத்திற் காளாகாமல் இவளை விட்டுவிட வேண்டுகிறேன். இவளும் இனித் தகாத இப்பிச்சைத் தொழிலை விட்டுக் கணிகையர்க்குத் தகுந்த நடனம் முதலிய துறைகளில் இறங்கி அத்தொழிலை வளர்க்கவேண்டும். தாங்களே இவளுக்கு அறிவு புகட்டவேண்டும்."

இவ்வாறு சித்திராபதி கூறியதைக் கேட்ட இராச மாதேவி சினந்து, "கட்குடியும் பொய்யும் காமமும் களவும் கொலையும் நிறைந்த உங்கள் கணிகையர் தொழிலைப் பாவமென வெறுத்து வந்த இந்தத் தூய நங்கை இனிக் குற்றம் நிறைந்த அந்த இடத்தை மிதிக்க வும் மாட்டாள்; இங்கே என்னுடனேதான் இருப் பாள்," என்றாள்.

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்போது, மணிமேகலையின் நிலையையறிந்த சுதமதியும் மாதவியும் அறவண அடிகளை அழைத்துக்கொண்டு இராசமா தேவியை நாடி வந்தனர். இராசமாதேவி மணிமேகலை சித்திராபதியுடன் சென்று, அறவண அடிகளை வணங்கி, 'எங்கள் நல்வினையாலே தாங்கள் எழுந்தருளினீர்கள். பல்லாண்டு பல்லாண்டுகளாகப் புத்த தருமத்தைச் சோர்வின்றிப் பரப்பி வருகிறீர்கள் இத்தகைய தாங்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ்வீர்களாக!' என்று வாழ்த்தினுள். அறவண அடிகள் அவளை மேலும் நல்வழியிலேயே நடக்கப் போதித்து, மணிமேகலையை நோக்கி, 'மற்றைச் சமயங்களின் கொள்கைகளையெல்லாம் நீ அறிந்து வந்தபிறகு புத்த தருமத்தைப் போதிப்பேன்,' என்றுர்.

மணிமேகலை அறவண அடிகளை வணங்கி, மற்றையோரைப் பார்த்து, 'உதயகுமரன் இவளாலே இறந்தானென்று என்னைக் கண்டோர் சுட்டிக் காட்டிக் கூறுவார்கள். ஆகையால், இனி நான் இங்கிருப்பது அழகாகாது. ஆபுத்திரன் மறுபிறப்படைந்து வாழும் நாட்டைக் கண்டு சென்று அவனோடு உரையாட விரும்புகிறேன். பிறகு அவனுடன் மணிபல்லவத்திற்கு வருவேன். அவனுக்குப் பழம்பிறப்பை உணர்த்தி விட்டு வஞ்சிமாநகரம் செல்வேன். அங்குப் பத்தினித் தெய்வத்தை வணங்குவேன். தனியே செல்வதால் எனக்கு எந்த இடையூருவது உண்டாகுமோ என்று வருந்தவேண்டா," என்று கூறி, உலக அறவிக்குச் சென்று சம்பாபதியையும் கந்திற் பாவையையும் (தூணிலிருக்கும் பதுமை) வணங்கி வானவழியே சென்ருள். செல்லும்போது, பூமியிலே, ஓரழகிய பொழிலையும்

நகரத்தையுங் கண்டு இளைப்பாறவேண்டி அங்கே யிறங்கினாள்.

### ௯. மணிமேகலையும் புண்ணியராசனும் மணிபல்லவம் அடைதல்

அப்பொழிலில் தருமசாவகன் என்னும் முனிவர் தவஞ் செய்துகொண்டிருந்தார். அவரை வணங்கி, 'இந் நகரின் பெயர் என்ன? இதன் அரசன் யார்?' என்று மணிமேகலை வினவினாள். அம்முனிவர், 'இது நாகபுரம். இதனை ஆள்பவன் பூமிசந்திரன் மகனான புண்ணியராசன் என்பவன். இவன் பிறந்த நாள்முதலாக இந்நாட்டில் மழை வளங் குறைந்ததில்லை. ஒருயிர்க்கும் நோய் நொடியில்லை. ஏழை யென்றும் அடிமை யென்றும் இங்கே எவருமில்லை, தீமையென்பது சிறிதும் இல்லை,' என்றார். மணிமேகலை வியப்படைந்து தான் தேடிவந்த ஆபுத்திரனே இந்தப் புண்ணிய ராசனென்று துணிந்து மகிழ்ந்து உலாவிக்கொண்டிருந்தாள்.

அப்போது புண்ணியராசன் தன் அரசியோடு வந்து அந்த முனிவரை வணங்கினான். அவர் அவனுக்குப் புத்த தருமத்தைப் போதித்தார். மணிமேகலையும் அப்போது உடனிருந்து புத்த தருமங் கேட்டாள். அவளைக் கண்ட புண்ணியராசன், ஒப்பற்ற பேரழகுடைய இவள், தன் தோற்றத்திற்கு மாறாகப் பிச்சைப் பாத்திரம் ஒன்றைக் கையில் வைத்திருக்கிறாள்; புத்த தருமம் கேட்கிறாள். இவள் செயல் வியப்பாக இருக்கிறது. இவள் யார்?' என்று அருகிலுள்ளவர்களைக் கேட்டான். அப்போது, அவனுடைய பிரதானிகளில் ஒருவன், 'முன்னொரு சமயம் காவிரிப்பூம்பட்டினத்திற்கு நான் சென்றேன். அங்கே அறவணஅடிக ளிருக்கை

யிலே இவளைக் கண்டேன். அவர் மூலம் இவள் வரலாற்றை அறிவேன்,' என்று வரலாற்றைக் கூறினான்.

மணிமேகலை அரசனை நோக்கி, 'அரசனே, முற்பிறப்பிலே உன் கையிலிருந்த அமுத சுரபியே இப்போது என் கையிலுள்ளது. அரச வாழ்விலே மயங்கி விட்டாய். மணிபல்லவத்திற்கு வந்து புத்தபாத பீடிகையை வணங்கினால் உன் பழம் பிறப்பை உணர்வாய். ஆகையால் அங்கே வருக,' என்று கூறினாள். அரசனும் வியப்புடன் ஒப்புக்கொண்டான். மணிமேகலை வான வழியே மணிபல்லவத்தை அடைந்தாள்.

புண்ணியராசன் முனிவரை வணங்கிப் பொழிலை விட்டுச் சென்று, அமரசுந்தரி என்னும் தன் வளர்ப்புத் தாயைக் கண்டு, தன் வரலாற்றை உணர்ந்தான். சனமித்திரன் என்னும் அமைச்சனை நோக்கி, 'இனி, நீ இவ்வரசாட்சியைப் பார்த்துக்கொள்: துறவு பூண்டு நன்னெறியை அடைய விரும்புகிறேன்' என்றான்.

அந்த அமைச்சன் கண்ணீர் ததும்ப, 'அரசே! தாங்கள் பிறப்பதற்குமுன் பன்னிரண்டாண்டு மழையின்றி வருந்திய இந்நாடு தாங்கள் பிறந்த பிறகு எவ்விதத் துன்பமுமின்றி வாழ்கிறது. இந்த நிலையிலே தாங்கள் துறவு பூண்டால் இந் நாடு பெருந்துயரிலே மூழ்கும்; தாயைப் பிரிந்த குழந்தைபோலத் தத்தளித்துக் கதறும். ஆகவே, தங்களுடைய நலம் ஒன்றையே கருதித் துறவு பூண்பது ஏற்றதாகாது,' என்று வணக்கத்துடன் வேண்டிக்கொண்டான்.

அரசன், 'மணிபல்லவத்திற்குச் செல்லவேண்டுமென்று என் உள்ளம் துடிக்கிறது. இந்த அளவு மீறிய ஆசையைத் தணித்துக்கொண்டு வருமளவும்—ஒரு

திங்கள் வரையில்—இந் நாட்டைப் பார்த்துக்கொள்,' என்று கூறிக் கடற்கரை சென்று கப்பலேறி மணிபல்லவத்தை யடைந்தான்.

மணிமேகலை அவனை எதிர்கொண்டழைத்து வந்து புத்தபீடிகையைக் காட்டினாள். அவன் பேரன்புடன் புத்தர் புகழைப் பாடிக்கொண்டு மும்முறை வலம்வந்து வணங்கி நின்றான். அப்போது அவனுக்குப் பழம்பிறப்பின் வரலாறு முழுதும் மனத்திலே தோன்றியது. புண்ணியராசன் அப்போ தடைந்த வியப்பையும் மகிழ்ச்சியையும் எப்படிக் கூற முடியும்? ஆபுத்திரனாக இருந்த தனக்கு உதவிய சிந்தாதேவியைத் திசை நோக்கித் தொழுதான். பிறகு, மணிமேகலையுடன் கோமுகி யென்னும் குளத்தையடைந்து மகிழ்ச்சியுடன் அதை வணங்கிக் கரையிலிருந்த புன்னைமர நிழலிலே தங்கினான்.

அப்போது, தீவதிலகை அங்கே வந்தாள். இருவரும் வணங்கினர். தீவதிலகை அரசனை நோக்கி, 'அமுதசுரபியினாலே உயிர்களின் பசிப்பிணியைப் போக்கிய மேலோனே! உன்னை இந்தத் தீவிலே விட்டுவிட்டு மறந்து கப்பலை ஓட்டிக்கொண்டு போய்விட்ட ஒன்பது செட்டிகள், திரும்பிவந்து நீ இறந்துபோனதை உன் எலும்புக் கூட்டால் அறிந்து தாங்களும் இறந்து போயினர். அச் செட்டிகளின் ஆதரவி லிருந்தோரும் இறந்துபோயினர். அவர்களுடைய எலும்புகள் இவைகள். உன் உடம்பின் எலும்புகள் இங்கே மணல்மூடிக் கிடக்கின்றன,' என்று எலும்புக் குவியல்களைக் காட்டினாள். பிறகு, 'உன் உயிரை நீயே கொன்றாய். மேலும் ஒன்பது செட்டிகளின் உயிர்களையும் அவர்களைச்

சார்ந்தவர்களின் உயிர்களையும் கொன்ருய். இவ்வாறு பல உயிர்களைக் கொன்றதால் அரசனுகிவிட்டாய்,' என்று புன்முறுவலுடன் அவன் முற்பிறப்பிலே உயிர்களிடம் காட்டிய அன்பினுல் உண்டான நிகழ்ச்சியைக் கூறினுள். தன்னுடம்பின் எலும்புகள் ஒரு புன்னைமர நிழலிலே மணலால் மூடப்பட்டுக்கிடப்பதை அரசன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் உள்ளம் மயங்கியது.

அவன் அவ்வாறிருக்கையில், தீவதிலகை மணி மேகலையைப் பார்த்து. 'நீ காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் கொண்ட செய்தி அறியாயோ?' என்ருள். மணி மேகலை திடுக்கிட்டுத் தனக்குத் தெரியாதென்று தலையை யசைத்தாள். அவள் நடுக்கத்தைப் பார்த்த தீவதிலகை, 'அஞ்சாதே! உன் அன்னை, தோழி, அறவண அடிகள் யாவரும் வஞ்சிக்குப் போய்விட்டனர்,' என்ருள்.

மணிமேகலை சற்றுத் தெளிந்து, 'ஏன் கடலிலே மூழ்கியது?' என்று கேட்டாள். தாம் பிறந்த நகரம் அழிந்ததென்ருல் யார் வருந்தமாட்டார்கள்?

தீவதிலகை அவளைப் பார்த்துப் புன்சிரிப்புடன் கூறுகிருள். "முன்பு கிள்ளிவளவனுக்கும் பீலிவளைக் கும் உண்டான தொடர்பை அறிவாயன்ருே? அவள் இந்த மணிபல்லவத்திற்கு வந்து தரும பீடிகையை வணங்கினுள். அவள் கையிலே கிள்ளிவளவனுக்கும் அவளுக்கும் பிறந்த ஆண்குழந்தையிருந்தது. அப்போது காவிரிப்பூம்பட்டினத்துக் கம்பளச் செட்டி யொருவன் இங்கே வந்திருந்தான். அவனிடம் குழந்தையைக் கொடுத்து, 'இவனை அரசரிடம் சேர்ப்பாயாக' என்ருள். அவனும் மகிழ்ச்சியுடன் வாங்கிச் சென்ருன். கப்பல் சென்றுகொண்டிருக்கும்போது புயலடித்துக் கப்பல் உடைந்தது. அந்தக் கப்பலிலிருந்து தப்பிய சிலர் சென்று

சோழனிடம் சொன்னார்கள். தன் மகன் கடலில் முழுகினான் என்று கேட்ட அரசன் மனமுடைந்து கடற்கரையிலே சுற்றிக்கொண்டிருந்தான். இந்திரவிழா அப்போது நடக்கவேண்டிய நாளாக இருந்தும் அதைப் பற்றிக் கவனிக்கவில்லை. இந்திரவிழா தவறியது. ஆகவே, இந்திரன் சாபப்படியும் மணிமேகலா தெய்வத்தின் சினத்தினாலும் காவிரிப்பூம்பட்டினம் கடலாற் கொள்ளப்பட்டது. அரசன் வேறிடஞ் சென்றான்."

இவ்வாறு கூறித் தீவதிலகை சென்றுவிட்டாள். மணிமேகலை நகரழிவைக் குறித்து வருந்தி ஒருவாறு தெளிந்து, புண்ணியராசனை அவன் நகரத்திற்கு அனுப்பிவிட்டு வஞ்சிமா நகரைக் காண வானத்திலே சென்றாள்.

## கடு. மணிமேகலையும் கண்ணகியும்

வஞ்சிமாநகரம் நெருங்க நெருங்க அவள் உள்ளத் துடிப்பு அதிகமாயிற்று. 'அன்னை கண்ணகியைக் காணப் போகிறேன்; பத்தினித் தெய்வம் என்று உலகம் போற்றும் உயர்ந்த நிலையை அடைந்தவள் என் அன்னை!' என்று அவள் மனம் மகிழ்ச்சியினாலே நிறைந்தது. வஞ்சிமாநகரை அடைந்தாள். கண்ணகியின் கோயிலுக்கு ஓடினாள். அன்னையின் சிலையைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் வடியச் சிலையின்முன் விழுந்து வணங்கினாள்; வாழ்த்தினாள்; மெய்ம்மறந்து நின்றாள். தமிழ் நாட்டுப் பெண்களுக்கெல்லாம் கண்ணகியாலே உயர்வு கிடைத்ததை நினைக்க நினைக்க அவள் உடம்பு சிலிர்த்தது. சிறிதுநேரங் கழித்துப் பரபரப்பும் படபடப்பும் அடங்கின.

மணிமேகலையின் உள்ளத்திலே ஓர் ஐயம் உண்டாகியிருந்தது. அவள், 'அம்மையே! கணவன் இறந்த

வுடன் தாங்களும் இறவாதது ஏன்? அல்லது கைம்மை நோன்பு (விதவை விரதம்) கொண்டாவது இருந்திருக்க லாம். அப்படியும் இல்லாமல் ஏன் மதுரையைத் தீயி னாலே அழிக்கவேண்டும்?' என்று வினவினாள்.

அதற்குக் கண்ணகி அசரீரியாகத் தன் கணவனுக்கு நேர்ந்த வீண் சாவுத்துன்பத்தைப் பொறுக்க முடியாமல் மதுரையை அழித்ததாகவும், மதுராபதியால் ஊழ் வினையை அறிந்ததாகவுங் கூறினாள். மேலும், 'நானும் உன் தந்தையும் முன் செய்த நல்வினையாலே இப்போது தேவர்களாக இருக்கிறோம் எனினும், மதுரையை அழித்த தீவினை விடாது. ஆகவே மறுபடியும் பிறந்து அதன் பயனை அடைந்து அனுபவிப்போம். பிறகு, புத்தர் பெருமான் மாணவர்களாகி வீடுபேறு அடை வோம்,' என்று விளக்கமாகக் கூறினாள்.

இதனால், எவராயிருந்தாலும் தீமைக்குப் பதிலாகத் தீமை செய்வதும் பாவமென்று தெரிகிறதன்றோ?

மறுபடியும், 'மணிமேகலையே! நீ இந் நகரத்திலே பல மதத்தினரின் கொள்கைகளையும் கேட்பாய். முடி விலே புத்ததருமத்தையே கைக்கொள்வாய்' என்று அவள் நிலையும் கண்ணகி விளக்கினாள். பிறகு மணி மேகலை கண்ணகியை வணங்கி வெளியே வந்தாள்.

அந்நகரிலே பல மதத்தினரும் இருந்தனர். அவர்க ளிடம் ஒரு முனிவன் போன்ற உருவத்துடன் சென்று மதக் கொள்கைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்டாள். பிறகு அறவண அடிகளும் மாதவியும் சுதமதியும் அந்த நகரத்திலே இருக்கிறார்களென்று தீவதிலகை கூறினா ளாகையால், அவர்களைத் தேடிச் சென்றாள். அவ்வாறு செல்கையில், ஒரு முனிவர் கோலத்துடன் கோவலன்

தந்தையான் மாசாத்துவான் இருப்பதைக் கண்டாள். மாசாத்துவான் தன் மகனிறந்ததைப் பொறுக்காமல் உலக வாழ்வை வெறுத்துத் துறவியாயிருந்தான். அவனைக் கண்ட மணிமேகலை அன்புடன் வணங்கித் தன் வரலாற்றைக் கூறினாள்.

மாசாத்துவான் அவளை நோக்கி, 'உன்னைக் கண்டது நான் செய்த நல்வினையாலேதான். நீ அடைந்த இந்த மேன்மையான நிலை எனக்கு மிகப் பெருமையாக இருக்கிறது,' என்று அன்புடன் கூறி, அவளுக்குப் பழம் முதலிய உணவுகளைக் கொடுத்தான். தன் பாட்டனார் தன்னைக் கணிகையின் மகளென்று வெறுக்காமல் அன்புடன் வரவேற்றது மணிமேகலைக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது.

எந்தக் குடியிற் பிறந்தாலும் நல்லொழுக்கமுடையவர்களை யாரும் மரியாதையுடன் வரவேற்பார்கள் என்று இதனால் அறிகிறோம் அல்லவா ?

பிறகு மாசாத்துவான், 'குழந்தாய்! இந்த நகரத்திலே உன் தந்தையின் பெயர்கொண்ட நம் முன்னோர் ஒருவர் கட்டிய புத்தர் கோயில் இருக்கிறது. அதைக் காண வந்தேன். காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல் விழுங்கிவிட்டதாகையால், இனி, இங்கேயே இருப்பேன். அறவண அடிகளால் உன் வரலாற்றை முன்பே அறிவேன். அவர் உனக்குப் புத்ததருமத்தைக் கூறுவதற்குக் காஞ்சிமாநகரம் சிறந்ததென்று அங்கே போய் விட்டார். மாதவியும் சுதமதியும் அவரோடு சென்று விட்டார்கள்,' என்றான். மேலும், 'காஞ்சிமாநகர் இப்போது மழையின்றி வறுமையடைந்து கிடக்கிறது. நீ அங்கே உடனே செல்வது நல்லது,' என்றுங் கூறினான்.

மணிமேகலை அவனை வணங்கிப் பதைபதைப் புடன் காஞ்சிமாநகரை நோக்கி வானவழியே சென்றாள்.

## ௧௧. மணிமேகலை காஞ்சி யடைதல்

நம் நாட்டிலே முற்காலத்திலே பெண்கள் இடையில் அணியும் அணிகளில், மேகலை, காஞ்சி என்பவைகளும் உண்டு. மணிமேகலை என்றால் மாணிக்கங்களாற் செய்த மேகலை என்று பொருள். ஆகவே, மணிமேகலை காஞ்சியை அடைதல் என்றால் ஓர் இடையணி மற்றோர் இடையணியை அடைவதென்று வேடிக்கையான ஒரு பொருள் உண்டாகவில்லையா? ஆனால், இங்கே மணிமேகலை என்ற பெண் காஞ்சிமாநகரத்தை அடைந்தாள் என்றுதான் பொருள்.

காஞ்சிமாநகரம் மிகப்பெரியது. இந்தக் கதை நிகழ்ந்த காலத்தில் அது சோழர்களின் ஆட்சியிலேதான் இருந்தது. பிறகு தொண்டைமான் என்ற அரசனாலே அமைக்கப்பட்ட தொண்டை நாட்டுக்குத் தலைநகரம் ஆயிற்று. பிறகே, பல்லவர் தொண்டைநாட்டைக் கைப்பற்றினர். மணிமேகலை அங்கே சென்றபோது தொடுகழற்கிள்ளியின் தம்பியான இளங்கிள்ளி அரசனாக் இருந்தான். சோழநாட்டின் ஒரு பகுதியை இந் நகரிலிருந்து அவன் காத்துவந்தான்.

மணிமேகலை காஞ்சிமாநகரின் வெளியிலே வந்திறங்கினாள். அழகு கெட்டுப்போய்க் கிடந்த அந்த நகரத்தைக் கண்டு வருந்தினாள். மழை பெய்யாவிட்டால் பச்சைப் புல்லும் பட்டுப்போய்விடுமன்றோ? பொழில்களெல்லாம் சுருண்டுகிடந்தன. பசுமை யென்பது கண்ணுக்குப் புலப்படவில்லை. பயிர் பச்சைகளில்லாத

இடம் பார்க்கப் பிடிக்குமா? மனிதர்களெல்லாம் தோலும் எலும்புமாக வற்றிப்போயினர்.

காஞ்சியை அடைந்த மணிமேகலை அந் நகரை வலமாக வந்து வணங்கி நகரினுட் புகுந்தாள். அங்கே இளங்கிள்ளியாற் கட்டப்பட்டிருந்த புத்தர் கோயிலை வணங்கி, அருகிலே இருந்த ஒரு பொழிலிலே தங்கினுள். அவள் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அரசன் விரைந்து வந்தான். அவளை வணங்கித் துக்கத்துடன், "என் ஆட்சியிலே ஏதோ குறையேற்பட்டோ, இந் நாட்டின் தீவினையாலோ, பெண்களின் கற்புக் குறைவாலோ இந் நாடு இவ்வாறு மழையின்றி வறண்டு போயிற்று. நாட்டின் நிலை என்னை வருத்தியது. மயக்கத்துடன் இருந்தேன். அப்போது ஒரு பெரிய தெய்வம், என் முன்னே வந்து, 'நீ வருந்தாதே! உன் நல்வினையாலே ஒரு மங்கை இங்கே வருவாள். அவள் கையில் ஒரு பாத்திர மிருக்கிறது. அது தெய்வத் தன்மை பொருந்தியது; எடுக்க எடுக்கக் குறையாமல் உணவு சுரந்துகொண்டிருக்குந் தன்மையுடையது. அதனுலே உன் நாடு வறுமைத் துன்பம் நீங்கும். அவள் செய்யும் அறத்தாலே மழையும் உடனே பெய்து நாடு வளமடையும். அந்தப் பாத்திரம் மணிபல்லவத்திலே கோமுகி என்னும் குளத்திலே கிடைத்தது. அங்கே ஒரு புத்த பீடிகையும் உண்டு. அவள் வந்திருப்பதற்காக, மணிபல்லவமே இங்கே வந்ததென்று கூறும்படி ஒரு குளமும் பொழிலும் உண்டாக்குக' என்று கட்டளையிட்டது. அது கூறியபடியே அமைக்கப்பட்ட குளமும் பொழிலும் இவை," என்று கூறி நின்றுன்.

மணிமேகலை அவைகளைப் பார்த்து மகிழ்ந்தாள்; அரசனைக்கொண்டு புத்த பாதபீடிகையையும் அமைத்

தாள்; தீவதிலகையையும் மணிமேகலா தெய்வத்தை யும் வழிபட அவர்களுக்குங் கோயில் கட்டுவித்தாள். பிறகு அந்தத் தெய்வங்களை வணங்கிப் புத்த பீடிகை யிலே அமுதசுரபியை வைத்துப் பசியினு லேங்கிய உயிர்களுக்கெல்லாம் உணவளித்தாள்.

அவள் உணவளிப்பதை அறிந்து குருடர், செவி டர், முடவர், ஆதரவில்லாதவர், ஊமைகள், நோயாளி கள் முதலான பசியால் வருந்திய யாவரும் வந்து உணவு பெற்றுக் களை தீர்ந்தார்கள். மக்களே யன்றி விலங்கு களும் பறவைகளுங்கூட வந்து கூடிவிட்டன.

இவள் செய்த அறத்தினுலே மழை நன்ருகப் பெய் தது. வளமும் முன்போல் மிகுந்தது.

அறவணவடிகளும், மாதவியும் சுதமதியும் மணி மேகலை யிருக்குமிடத்திற்கு வந்தனர். மணிமேகலை அறவண அடிகளின் திருவடிகளை வணங்கி அறுசுவை உண்டியை உண்பித்தாள். பிறகு, புத்த தருமத்தைப் போதிக்கும்படி வேண்டினுள். அவ்வாறே அவரும் விளக்கமாக உபதேசித்தார். மணிமேகலை ஐயமும் திரிபும் இன்றி அறிந்து, 'பிறவித்துன்பம் ஒழிக' என்று புத்தர் பெருமானை வாழ்த்திக்கொண்டு மாதவி யுடனும் சுதமதியுடனும் அங்கேயே வசித்துவந்தாள்.

### கஉ. இக்கதையால் அறியும் அறவுரைகள்

1. மணிமேகலை தான் கணிகையின் மரபிற் பிறந் தாலும், ஒழுக்கந்தவருமல் இருந்ததாலே, எல்லோரா லும் உயர்வாக மதிக்கப்பெற்ருள். ஆகையால், எக் குடியிற் பிறந்தாலும் ஒழுக்கமுடையோர் உயர்வடை வர் என்று அறிகிருேம்.

2. உதயகுமரன் அரசகுமாரன். குடிகள் ஒழுக்கந் தவருமற் பார்த்துக்கொள்வது அவன் கடமை. எனினும், அவனே மணிமேகலையைக் கெடுக்கப் பல முறை முயன்ருன். அதனுலே, காஞ்சனனுலே வெட்டுண்டான். ஆகையால், யாராயிருந்தாலும், 'அடாது செய்தார் படாது படுவர்' என்று அறிகிருேம்.

3. புண்ணியராசன் முற்பிறப்பிலே ஆபுத்திரனுக இருந்து செய்த புண்ணியத்தாலே அரசனுனுன். அவனிருந்த நாடு எல்லாவகையிலும் வளம் பெற்றிருந்தது. ஆகவே, நன்மை செய்தோர் நன்மையடைவர் என்று அறிகிருேம்.

---

## கரு. தேர்வுக்குரிய பயிற்சிகள்.

கீழ்க்கண்டவற்றைக் குறித்துப் பத்துப் பதினைந்து வரிகளில் நீ அறிந்ததை எழுது :—

1. உதயகுமரனும் மணிமேகலையும். 2. மணிமேகலா தெய்வமும் மணிமேகலையும். 3. தீவதிலகையும் மணிமேகலையும். 4. காயசண்டிகையும் மணிமேகலையும், இராசமாதேவியும் மணிமேகலையும். 5. புண்ணியராசனும் மணிமேகலையும். 6. கண்ணகியும் மணிமேகலையும். 7. மாசாத்துவானும் மணிமேகலையும். 8. அறவண அடிகளும் மணிமேகலையும். 9. காவிரிப்பூம் பட்டினம் கடல் கொண்டது.

2. பத்து வரிகளிற் குறிப்பெழுது :—

1. காஞ்சனன். 2. காயசண்டிகை. 3. அறவண அடிகள். 4. மணிமேகலா தெய்வம். 5. தீவதிலகை. 6. புத்தபாத பீடிகை. 7. மணிபல்லவம். 8. புண்ணியராசன். 9. அமுத சுரபி.

---

Publication No. 418



# KAPPIYA KATHAIGAL

BOOK II

## MANIMEKALAI

BY

Pulavar "ARASU"




THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.
TINNEVELLY & MADRAS 1

அப்பர் அச்சகம், சென்னை 1.

Price As. 10